# தேவாரத் திருமொழிகள்




❋

ஆசிரியர் :

கவிச்செம்மல்

டாக்டர் ரெ. முத்துக்கணேசன்



❋

திருமலை வெளியீடு



❋

இலக்கியக் கழகம்
எண். 1. கல்லுக்கட்டி மேற்கு
காரைக்குடி.

1989.

திருமண அன்பளிப்பு

திரு. சா. நா. அ. அழ. அ.
அழகப்ப செட்டியார்
காரைக்குடி.

1/2

காரைக்குடி,

சிவன் எனும் நாமம் தனக்கே உடைய செம்மேனி எம்மாளுகிய சிவ பெருமானை நாள்தோறும் நினைந்து தொழும் சிவநெறியாளர், அறம் வழங்கும் நெஞ்சினர் உயர்திரு. சா. நா. அ. அழ. அ. அழகப்பசெட்டியார் பேரன் அழகப்பன் என்ற தண்ணீர்மலையின்,

திருமண அன்பளிப்பு

சுக்கில—வைகாசி—12

25—5—1989

# திருமுறை வாழ்த்து

திருக்கோயிற் கலையமுதைத்
தெளிவடையார் மருள்நீக்கும்
அருள்வி ளக்கைப்

பெருக்கோடும் புனல்முதலாம்
ஐம்பூதப் பெற்றிகொளும்
அறிவுப் பேற்றை

மருக்கோல மலர்மணத்தை
மந்திரத்தைத் தெய்வீக
மாலை தன்னைத்

திருக்கோல இசையமுதைச்
சிவமாக்கும் திருமுறையைப்
போற்றிச் செய்வாம்!

—டாக்டர் ரெ. மு.

# முன்னுரை

இவ்வுலகம் மண், தீ, நீர், காற்று, வான் ஆகிய ஐம்பெரும் இயற்கைப் பொருள்களால் ஆனது. இவ்வியற்கைப் பொருள்களால், உலகு உருவாக்கப் படுகின்றது.

''நிலம்தீ நீர்வளி விசும்போ டைந்தும்
கலந்த மயக்கம் உலகம்'' — என்பது

தொல்காப்பியம் (தொல். பொருள். 644)

இப்பொருள்கள் உலகைக் காக்கின்றன; உயிர்களை வளர்க்கின்றன; இவை ஓர் ஒழுங்கிற்குக் கட்டுப்பட்டு உலகை இயக்குகின்றன. இவ்வியத்தகு இயக்கத்தின் அரிய சக்தியை மனித சமுதாயம் ஆராயத் தொடங்கியது. அதன் பயனாக, எல்லாவற்றிற்கும் அடிப்படையாக, மூல சக்தியாக இறையருள் என்பது ஒன்று உண்டு என்னும் உண்மையை மக்கள் உணர்ந்தனர். இவ்வாறு உணர்ந்து தெளிந்த மாமுனிவர்கள், அருளாளர்கள் ஆகியோர் உரைத்த அருள்வாக்குகளைச் சிதரு வண்ணம் மக்கள் தொகுத்து காத்து வந்தனர். இவ்வகையில் தொகுக்கப் பெற்ற அருள் வாக்குகளே சமயநூல் என்ற பெயரைத் தாங்கிப் பின்னர் நாட்டிலும் ஏட்டிலும் நல்லோர் நாவிலும் நிலைத்தன! அவைகளே

மறைமொழி எனவும் மந்திர நூல்கள் எனவும் போற்றப் படலாயின.

**"நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
மறைமொழி தானே மந்திரம் என்ப"**—

என்பது தொல்காப்பியம்(தொல்,பொருள்409)

இவ்வாறு அருளாளர் பலர் அவ்வப்போது தோன்றித் தங்கள் தங்கள் சமயத்திற்கென்று சமயநூலை ஆக்கிக் கொடுத்தனர். இந்துசமயம் அறிவுச் செல்வங்களாகிய **இருக்கு முதலிய வேதங்களின்"** தொகுப்பைப் பெற்றது. இசுலாமிய சமயம் **"குர்ஆன்"** என்ற நூலைப் பெற்றது. கிறித்தவ சமயம் **"பைபிள்"** என்ற நூலைப் பெற்றது. புத்த சமயம் **"தம்மபதம்"** நூலைப் பெற்றது. சீக்கிய சமயம் "ஆதி **கிரந்தம்"** என்ற நூலைப் பெற்றது. அவ்வகையில் தமிழர்கள் **"தேவாரம் திருவாசகம்" முதலிய திருமுறைகளையும், "நாலாயிரத்திவ்வியப்பிரபந்தங்களையும்"** பெற்றனர். சைவர்களுக்குச் சிறப்பாகத் **"தேவாரம்"** மூல மந்திரமாய் விளங்குவதாயிற்று!

தேவாரம் பாடியவர்கள் மூவர். அவர்கள் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், திரு சுந்தரர் என்பவர்களாவர். திருஞானசம்பந்தர் அருளிய திருக்கடைக்காப்புகள் மூன்று திருமுறைகள். திருநாவுக்கரசர் அருளிய தேவாரங்கள் அடுத்த மூன்று திருமுறைகள். திரு சுந்தரர் அருளிய திருப்பாட்டுக்கள் அடுத்த ஒரு திருமுறை, இந்தஏழுதிருமுறைகளும்'தேவாரம்' என்னும் பொதுப் பெயராலேயே **வழங்கப்**

படுகின்றன. தேவாரத் திருமொழிகள் ஒவ்வொன்றும் அமுத மொழிகளாகும். அவை அறிவுக்கு விருந்து மட்டுமல்ல, ஆருயிர்கள் உய்வதற்கு உயர்வழிகாட்டும் ஒப்பற்ற மந்திர மொழிகளுமாகும். இறைஅருளைக் கூட்டுவிக்கும் இன்னருள் மொழிகளுமாகும். இத் தேவாரத் திருமொழிகள், வாழ்க்கையில் மக்கள்தம் உணர்வினைப் புறத்தே செலுத்த விடாமல் தடுத்து, அகத்தே இறைவனைப் பற்றி நிற்க உதவும் திருமொழிகளாகும்; மக்களின் அறியாமையாகிய மும்மலமாசுகளைப் போக்கி, ஞானஒளியை நல்கும் ஞான மொழிகளாகும்.

''தேவாரத் திருமொழிகள்" என்ற இச்சிறு நூல் 21 பாடல்களைக் கொண்ட திருநூலாகும். இது தேவாரத் திருக்கோயிலைக் காண்பதற்கு உரிய பலகணியாய் நின்று; பயன்தரு நூலுமாகும். இறை திருஅருளை எளிதில் அடையத் தேவாரத் திரு வினர் போதித்த பத்திநெறியின் பண்பினை இந்நூலில் காணலாம். கடவுள் போல் காலம் கடந்து நிற்கும் மந்திரப் பாடல்களாகிய இத் தேவாரத் திருமொழிகளைத் தமிழ்ப் பெருமக்கள் நாளும் போற்றி நலம் பெறுவார்களாக!

வணக்கம்

ரெ. முத்துக்கணேசன்,
20—5—89 தலைவர், இலக்கியக் கழகம்
கல்லுக்கட்டி மேற்கு
காரைக்குடி 623 001

# மூவர் வாழ்த்து

திருஞான சம்பந்தர்

கண்கலங்கி அழுதலுமே கலையரசர்
 கருணையினுல் ஞானப் பாலும்
பண்குலுங்கும் இசைத்தமிழும் படிக்காசும்
 படைத்தருளப் பெற்ற வன்காண்;
மண்துலங்கச் சைவத்தின் மணந்துலங்க
 வல்லமணர் வலிய டக்கி
எண்விளங்க மாலையணி இசைஞான
 சம்பந்தன் இருதாள் போற்றி!

திருநாவுக்கரசர்

அஞ்செழுத்தின் புணைபிடித்தே உழவாரப்
 படையேந்தி அரன்தன் நாமம்
நெஞ்சுநிறை "சிவாயநம" எனப்பயின்று
 நினைந்தழுது மேனி யெல்லாம்
நஞ்சுமிழும் அரவணிந்தான் திருநீற்றின்
 நலம்விளங்க அசைந் தசைந்தே
கொஞ்சுதமிழ்ப் பண்ணிசைத்துக் குழைந்துருகும்
 அப்பரினை அடியே போற்றி!

திரு சுந்தரர்

வேதத்தின் உட்பொருளாய் விளங்கிஅவ்
 வேதங்கள் பரவ நின்ற
பாதத்தால் நடந்தேகிப் பரவையர்பால்
 தூதுரைத்தோன் அருளைப் பெற்றுேன்;
நாதத்தின் ஒலிவழியே நாயகனைத்
 தோழனுமாய்க் கண்ட யோகி
போதத்தன் திருநாவல் சுந்தரன்தன்
 பொற்றுளைப் போற்றி செய்வோம்!

—டாக்டர் ரெ.மு

# சிவ விளக்கு

தமிழர்கள் சிவபெருமானைச் சோதி வடிவமாக வழிபட்டனர்; விரிசுடராய், விளக்கொளியாய்க் கண்டனர்; எல்லா விளக்கும் இறைவன் திருவுரு எனக் கொண்டனர்; விளக்கில் சுடர் விட்டு எரியும் சுடர் வடிவையே சிவலிங்க வடிவமாகத் தொழுதனர்; அச்சுடரிலிருந்து பிறக்கும் ஒளி இருளை ஓட்டி அறிவையும் அருளையும் தருவதால் அதனையே சிவ உருவமாகத் தொழுதனர்; அச்சுடர் வடிவையே தொட்டு வழிபடவும், மந்திர நீர் ஊற்றி வழிபடவும் கல்லில் வடித்து இறைவழிபாடு செய்தனர்; அதற்குச் சுடர்த்திபம் காட்டி வணங்கினர். சிவம் என்பது "செம்பொருள்" என்று பொருள்படும். சுடரும் செம்மை நிறந்தானே! சிவன் எனும் நாமம் தனக்கே உடைய செம்மேனி எம்மானாகிய சிவ பெருமானைச் செம்பொற் சோதியாகவே திருஐயாற்றில் கண்டு வழிபடுகின்றார் நாவுக்கரசர்; மேலும் இயற்கையில் எழுகின்ற ஒலி, இயற்கையில்

பூக்கும் மலர் எல்லாம் சிவனாகவே கண்டு இன்புற்று நமக்கு இறை உணர்வை உணர்த்துகின்றார்.

திரு ஐயாற்றை அகலாது வாழும் செம்பொன் நிறமாக விளங்கும் சோதிவடிவமான சிவ பெருமானே! இயற்கையில் எழுகின்ற எல்லாவகை ஓசையாகவும் பின் ஒழுங்குபடுத்தப்பட்ட மந்திர ஒலியாகவும் ஒலிப்பவனும் நீயே! இவ்வுலகுக்கு ஓரே ஒரு தெய்வமாகக் காட்சியளிப்பவனும் நீயே! இயற்கையில் பூக்கின்ற மண மலர்களாக மணப்பவனும் நீயே! மலையரசன் மருகனாய் வேடம் புனைபவனும் நீயே! எல்லோராலும் வாயினிக்கப் பாடித் துதிக்கப் பெறுபவனும் நீயே! பெருமானாகிய உன் திருவடியை என்மேல் வைத்துக் காப்பவனும் நீயே! எல்லா வகைத் தேசங்களிலும் அந்தந்த தேசங்களின் திருவிளக்குகளாய்ச் சுடர் வடிவில் ஒளிர்பவனும் நீயேயாகும் என்பர்.

**ஓசை ஒலியெலாம் ஆனாய் நீயே**
**உலகுக்கு ஒருவனாய் நின்றாய் நீயே**
**வாச மலர்எலாம் ஆனாய் நீயே**
**மலையான் மருகனாய் நின்றாய் நீயே**
**பேசப் பெரிதும் இனியாய் நீயே**
**பிரானாய் அடிஎன்மேல் வைத்தாய் நீயே**
**தேச விளக்கெலாம் ஆனாய் நீயே**
**திருவையாறு அகலாத செம்பொற் சோதி!**

— திருநாவுக்கரசர்
(திருஐயாறு)



# அகல் விளக்கு

உலகில் இருள் கவிவது இயற்கை; ஆனால் ஒளிபிறந்திட அவ்விருள் மறைகின்றது. அதுபோல உயிர்கள் அறியாமை வயப்படுதல் இயற்கை; ஆனால் அருளாளர்கள் இறைவனைப் பற்றிய ஞான ஒளி விளக்கை ஏற்ற, அவ்வறியாமை அகல்கின்றது. அருளாளர்கள் உலகிற்கு இறைவன் ஒருவன் என்றனர்; அவ்வொருவனையும் எப்பொழுதும் மனத்தால் முழு நம்பிக்கையோடு சிந்திக்க வேண்டும் என்றனர்; இவ்வாறு நாளெலாம் நினைந்து உருகிச் சிந்தித்தலைத்தான் ''தவம்'' என்றனர்; இத்தவம் இறைவன் பேரருளை மிக எளிதாக அடைவதற்குரிய சிறந்த வழி என்றும் கூறினர்.

இவ்வகையில் உள்ளத்தின் உள்ளே சிந்தித்தலாகிய ஞான விளக்கை உங்களுக்குள்ளேயே ஏற்றிக் கொள்ளுங்கள். அந்த ஞான விளக்

கொளியில் இறைவனைக் கண்டு களியுங்கள் என்று நமக்கு வழி காட்டுகின்றார் நாவுக்கரசர்.

உடம்பு என்பது வீடாகும்; அவ்வீட்டகத்துள் இருக்கும் மனம் அகலாகும்; அவ்வகலில் ஊற்றப் படும் நெய் அறியாமை நீங்கிய நல்லுணர்வாகும்; அவ்வகலில் உள்ள திரி நம்முடைய உயிராகும்; அவ்வுயிராகிய திரியில் ஏற்றவாறு இடையறாது இறையைச் சிந்தித்தலாகிய ஞானத்தீயைப் பற்ற வையுங்கள். ஞானத் தீயால் பாசஉணர்வு அற்ற நிலையில் உள்நோக்கிப் பார்த்தால் கடம்ப மலர் மாலையை அணியப் பெற்ற முருகப் பெருமானது தந்தையாகிய சிவபெருமானது வீரக்கழல் அணிந்த திருவடியைக் காணலாகும் என்பர் நாவுக்கரசர்.

**உடம்புஎனும் மனைய கத்துள்**
**உள்ளமே தகளி யாக**
**மடம்படும் உணர்நெய் யட்டி**
**உயிரெனும் திரிம யக்கி**
**இடம்படு ஞானத் தீயால்**
**எரிகொள இருந்து நோக்கில்**
**கடம்பமர் காளை தாதை**
**கழல்அடி காண லாமே!**

**— திருநாவுக்கரசர்.**



# அகப்பூசை

சோதியைக் கண்டோம்; வழிபாடு செய்ய வேண்டாமா? வழிபடும் முறையைக் கூறுகின்றார் நாவுக்கரசர். உள்ளத்தை இறைவன் வீற்றிருக்கும் திருக்கோயிலாகக் கண்டனர் தமிழர்கள். அடியார்களின் நெஞ்சமலரின் வீற்றிருப்பவன் இறைவன் என்றும், அவன் திருவடிகளை இடையறுது மனத்தில் எண்ணி உருகுவோர் இந்நிலவுலகத்தின் கண்ணே நிலைத்து வாழ்வார்கள் என்றும் திருவள்ளுவர் கூறுகின்றார் -

'மலர்மிசை ஏகினான்
மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடு
வாழ்வார்'' — என்பது குறள்.

இறைவனுக்குக் கோயில் நம் உடல்; உள்ளம் கருவறை; தூய்மையான உள்ளத்து ஒளியே சிவலிங்கம்; குழந்தை எவ்வாறு விளையாடும்

பொம்மையின்பால் பேரன்பைப் பொழிகிறதோ அவ்வாறே இறைவனுக்கு, அவன்பால் காதலாகிக் கசிந்த அன்பை முழுக்காட்டி ஆராதனை செய்ய வேண்டும் என்றுகூறி அகப்பூசைக்கு வழிவகுத்துக் காட்டுகின்றார் நாவுக்கரசர்.

உடம்பு கோயிலாகும்; ஐம்புலன்களின் வழிப்படாது பூசை செய்யும் மனம் அடிமையாகும்; வாய்மை யோடு வாழ்வதுதான் தூய்மை நிறைந்த மனமாகும்; அத்தூய்மையான மனத்தகத்தே உண்டாகும் ஒளியே சிவலிங்கமாகும். பேரன்பை, நெய், பால் போன்ற அபிடேகப் பொருள்களாகக் கொண்டு இறைவனுக்கு முழுக்காட்டி, நாம் மனதார அவனை எண்ணித் துதித்தலாகிய செயலையே உணவாகக் காட்டி ஆராதனை செய்து நன்கு அகப்பூசை செய்ய வேண்டும் என்கிறார் திருநாவுக்கரசர் பெருமான்.

**காயமே கோயி லாகக்**
**கடிமனம் அடிமை யாக**
**வாய்மையே தூய்மை யாக**
**மனமணி இலிங்க மாக**
**நேயமே நெய்யும் பாலா**
**நிறையநீ ரமைய ஆட்டிப்**
**பூசனை ஈச னார்க்குப்**
**போற்றவிக் காட்டி னோமே!**

—திருநாவுக்கரசர்.



# நமச்சிவாய மந்திரம்

நமச்சிவாய மந்திரம் சைவத்திற்கே உரிய மூல மந்திரமாகும். இதனைச் சிவாயநம என்றும் இயம்புவர். திரு ஐந்தெழுத்து என்றும் செப்புவர். நமச்சிவாய மந்திரம் மந்திரங்களுக்குள் எல்லாம் தனிச் சிறப்புடையதாகும். யாவற்றையும் தன்னுள் அடக்கித் தானே மூல மந்திரமாய்த் திகழ்வதாகும்.

**''முந்தை முதல் மந்திரங்கள் எல்லாம் தோன்றும்**
**முதலாகும் முதல்வனார் எழுத்தஞ்சு என்பர்**
**அந்தியினுள் மந்திரம் அஞ் செழுத்து மேஎன்று**
**அஞ்செழுத்தின் திருப்பதிகம் அருளிச்**
**செய்தார்"**

12 ஆம் திருமுறை; திருஞான : 266

என்பது சேக்கிழார் திருவாக்காகும். இம்மந்திரம் நால் வேதத்தினுள்ளும் மெய்ப்பொருளாக விளங்குவது. இதனைச் சித்தம் உருகச் செபிப்பவர்களுக்கு,

எண்ணிய வெல்லாம் எண்ணியவாறு கிடைக்கும் இறைவன் திருவடிப்பேறு எளிதாகக் கிடைக்கும் என்று கூறுகின்ருர் திருஞான சம்பந்தர்.

நாதன் சிவபெருமானுடைய திருநாமமாகிய 'நமச்சிவாய' என்ற மந்திரத்தைச் சொல்லிச் சிவபெருமான் திருவருளில் காதலாக வேண்டும்; அவனை இடையருது நினைந்து மனம் கனிந்து கசியவேண்டும்; கண்ணீர் மல்க வேண்டும்; இவ்வாறு பேரன்போடு பக்தி செய்து அவன் திருநாமத்தை இடையருது ஓத வேண்டும். அவன் நாமத்தை ஓதுபவர்களை நல்ல நெறியாகும் வீடுபேற்றிற்குக் கொண்டு செலுத்தும் சிறப்புவாய்ந்தது அவன் நாமம். நால்வகைப்பட்ட வேதங்களுக்குள்ளும் மெய்ப்பொருளாக, உண்மைப் பொருளாகத் திகழ்வதும் இம்மூல மந்திரமாகும் என்று அதன் சிறப்பைப் பாடுகின்ருர் திருஞானசம்பந்தர்.

**காத லாகிக் கசிந்துகண் ணீர்மல்கி**
**ஓது வார்தமை நன்னெறிக் குய்ப்பது**
**வேத நான்கினும் மெய்ப்பொருள் ஆவது**
**நாதன் நாமம் நமச்சி வாயவே!**

**— திருஞான சம்பந்தர்**

(நமச்சிவாயத் திருப்பதிகம்)



# நமச்சிவாயத் திருவிளக்கு

கதிரவன் மறைய இருள் பரவுகின்றது; ஆனுல் விளக்கினை ஏற்ற அவ்விருள் அகலக் காணு கின்றோம். அது போல அறியாமை இருளாகிய அக இருளைப் போக்கி ஞான ஒளி விளக்கை ஏற்றி நம்மை உய்விப்பது 'நமச்சிவாய' என்று சொல்லக் கூடிய திருவிளக்காகும் என்பர் திருநாவுக்கரசர்.

நம் இல்லத்திலே ஏற்றப்படும் விளக்கு, புற இருளை ஒட்டும். பலவகைப்பட்ட வடிவங்கள் தாங்கிய இவ்விளக்குகளைப் பலரும் காணலாம். ஆனுல், இடையருது ஒதப்பெற்று உள்ளொளி கூட்டும் விளக்கு 'நமச்சிவாய' என்னும் மந்திர விளக்காகும்; அது மன விளக்காய்ச் சுடர்விட்டு, இவ்வுலகப் பற்றுக்களாகிய பாச இருளை ஒட்டி, இறையருளைக் கூட்டுவிக்கும் ஞான ஒளியைத் தந்து நிற்கும். அவ்விளக்கே ஐந்தெழுத்து மந்திர மாகிய 'நமச்சிவாய' என்பதாகும்.

இல்லக விளக்கது
இருள்கெ டுப்பது

சொல்லக விளக்கது
சோதி யுள்ளது

பல்லக விளக்கது
பலரும் காண்பது

நல்லக விளக்கது
நமச்சி வாயவே!

— திருநாவுக்கரசர்
(நமச்சிவாயத் திருப்பதிகம்)



# நமச்சிவாய நாமம்

எல்லாம் வல்ல சிவபெருமான் திருநாமம் 'நமச்சிவாய' என்பதாகும்; அவன் உயிர்களைத் தோற்றுவித்துக் காப்பதனுல் எல்லா உயிர்களுக்கும் தந்தையாகின்ருன்; உயிர்களின் வாழ்வை நடத்திச் செல்வதனுல் தலைவனுகின்ருன்; மேலும் அவன் திருநாமம், தொடர்ந்து செபிப்பவர்களுக்குக் கவசமாகி எல்லாவகை இடர்களையும் போக்கிக் காக்கின்றது எனக் கூறுகின்ருர் திரு, சுந்தரர்.

பல்வேறு கற்களை உருட்டித் தள்ளிக் கொண்டு வேகத்தோடும், வளமைகளைக் கொழித்துக் கொண்டும் பாய்ந்தோடி வருகின்றது காவிரி. அதன் கரையில் உள்ளஊர், நல்ல மெய்யடியார்கள் பலராலும் தொழுது போற்றும் திருப்பாண்டிக் கொடு முடியாகும். அத்திருப் பாண்டிக் கொடு முடியில் கோயில் கொண்டிருக்கும் எல்லாம் வல்ல சிவபெருமானே! எல்லையில்லாத புகழைக்

கொண்ட உயிர்களின் வாழ்வை நடத்தும் தலைவனே! உயிர்களைத் தோற்றுவித்துக் காக்கின்ற தந்தையே! தனக்கு வேறு தலைவன் இல்லாத தம்பிரானே! பொன் போன்ற நிறமுடையவனே! சிறந்த மாணிக்கம் போன்றவனே! மாயை முதலியவற்றால் உன்னை நான் மறந்து விட்டாலும், என் உடைய நாவானது உன் திருநாமமாகிய நமச்சிவாயத்தைச் சொல்லிக் கொண்டேயிருக்கும் என்பர் திரு, சுந்தரர்.

**எல்லையில் புகழ்எம் பிரான்எந்தை**
**தம்பிரான்என் பொன் மாமணி**
**கல்லையுந் திவளம் பொழிந்திழி**
**காவிரி யதன் வாய்க்கரை**
**நல்லவர் தொழுதேத்தும் சீர்க்கரை**
**ஊரிற்பாண்டிக் கொடுமுடி**
**வல்லவா! உனைநான் மறக்கினும்**
**சொல்லுநா நமச்சிவாயவே!**

—திரு, சுந்தரர்

(திருப்பாண்டிக் கொடுமுடி)



# திரு நீறு

சைவப் பெருமக்களுக்குத் திருநீறு பெரிய செல்வமாகும். திருநீறு, வெந்து நீருகக் காட்சி யளிப்பதுபோல், பூசுபவரின் தீவினைகளை நீருக்கி நலத்தை அளிக்கவல்லது; தவமுடையார்களுக்கும் துணைநிற்க வல்லது; அழகையும், கீர்த்தியையும் அளிக்கக் கூடியது; ஞான அறிவைத் தரவல்லது; மேலும் மந்திரம் போன்று துதிக்கும் பொருளாகப் போற்றத்தக்கதென்றும், இறைவன் அணியும் அணியாக விளங்க வல்லது என்றும் கூறுவார் திருஞானசம்பந்தர்.

திருப்பவள வாயையுடைய உமையம்மையைத் தன் திருமேனியில் செம்பாதியாகக் கொண்டவன் சிவன். அவன் திருஆலவாய்க் கோயிலில் வாழ்ப வன், அவனது திருநீறே மந்திரச் சொற்களின் அருளைப் போன்றது; தேவர்கள் பத்தியோடு அணி யப் பெறுவது; யாவருக்கும் அழகைக் கொடுப்பது; யாவராலும் துதிக்கப்படுவது; அறிவு நூலின்

ஆற்றலைப் போன்று அறியாமையை விலக்கி இறை அறிவை ஊட்ட வல்லது; சைவசமயத்தின் மூலப்பொருள்களாகவும் அமைந்திருப்பது திருநீறே யாகும்என்பர்.

மந்திர மாவது நீறு
வானவர் மேலது நீறு

சுந்தர மாவது நீறு
துதிக்கப் படுவது நீறு

தந்திரம் ஆவது நீறு
சமயத்தில் உள்ளது நீறு

செந்துவர் வாய்உமை பங்கன்
திருஆலவா யான் திருநீறே!

— திருஞானசம்பந்தர்.

(திருஆலவாய்)






# மாதொரு பாகன்

தமிழர்கள் மரபு இறைவன்வேறு, இறைவி வேறு என எண்ணுவதில்லை. இறைவனையும் இறைவியையும் ஒன்ருகவே உணர்ந்து மாதொரு பாகனுகத் தமிழர்கள் வழிபட்டார்கள். இறைவன் ஒருவன்தான், ஆகவே அதில் ஆண் பெண் கற்பித்துப் பிரித்து வழிபாடியற்றல் ஆதிநாளில்இல்லை. தேவாரம் பாடிய மூவர்களும், மற்றும் திருமுறை ஆசிரியர்களும், இறைவிக்கு என்று தனிப்பாடல் பாடவில்லை. இறைவனையும் இறைவியையும் சேர்த்தே பாடியுள்ளனர். திருப்பூவணநாதரை நோக்கி அப்பர்பெருமான்' 'ஆணுகிப் பெண்ணுய வடிவு தோன்றும்'' — என்று பாடியுள்ளார். ஆணும் பெண்ணும் கலந்த அழகு வடிவம் உலகிலேயே தமிழர் கண்ட கலைவடிவம், ஒவ்வொரு மனிதனுக்குள்ளும் ஆண்மைப் பண்பும். பெண்மைப்பண்பும் கலந்துநிற்கக் காணுகின்ருேம். இத்தத்துவத்தை உணர்த்தும் ஆண்மையும் பெண்மையும் கலந்த கலைவடிவத்தில் ஈடுபட்டுக் கவிஅழகும் இறை

உணர்வும் கலந்த பாடலாக அளிக்கின்றார் அப்பர் பெருமான்.

ஒருபால் ஆண்வடிவம்; மற்றொருபால் பெண் வடிவம்; ஆணின் காதில் புதிதாகச் சமைக்கப்பட்ட பொன்னால் ஆன காதணி ஒளிர்கின்றது. பெண் வடிவக் காதினில் துளைபட்ட சங்கால் செய்த காதணி புரள ஒளிர்கின்றது. ஆண்பால் வடிவத் திருவாயில் ஒழுங்கு நெறிப்படி வேதங்களின் இசை ஓதப்படுகின்றது; பெண்பால் வடிவத் திருவாயில் புன்சிரிப்புத் தவழ்கின்றது; ஆண்பால் வடிவத்தில் தேன் பிலிற்றும் கொன்றை மலர் சூடிய திருச் சடையிருக்கின்றது; பெண்பால் பகுதியில் அழகுக் குழல் இருக்கின்றது; இவ்வாறு சிவன் உமையோடு ஓர் உடலில் இருவராகத் தங்கள் தங்கள் அழகுவண்ணம் மிளிரக் காட்சி தருகின்றார். இஃது இவர்தம் இயல்பு போலும்! எனக் கூறுவர் திருநாவுக்கரசர்.

**புதுவிரி பொன்செய் ஓலை ஒருகாது ஓர்காது**
**சுரிசங்கம் நின்று புரள**
**விதிவிதி வேதகீதம் ஒருபாடும் ஓத**
**ஒருபாடு மெல்ல நகுமால்**
**மதுவிரி கொன்றைதுன்று சடைபாகம் மாதர்**
**குழல்பாக மாக வருவார்**
**இதுஇவர் வண்ணவண்ணம் இவள்வண்ண வண்ணம்**
**எழில்வண்ண வண்ண இயல்பே!**

— திருநாவுக்கரசர்

(மாதொருபாகன் திருப்பதிகம்)



# நங்கையும் தலைவனும்

தமிழில் அகப்பொருள் ஒழுக்கம், தமிழ் இலக்கியத்திற்கே தனிச்சிறப்புடைய ஒன்றாகும். தலைவன் தலைவி காதலை மிக அழகுபட அகத்துறையில் வைத்துப் புலவர்கள் நன்கு விளக்குவார்கள்.

சைவசித்தாந்தம், சிவபெருமானைத் தலைவன் ஆகவும், உயிர்கள் அப்பெருமானைக் கண்டு காதலுறும் தலைவிகளாகவும் கூறும். அவ்வகையில், அப்பர் பெருமான் தன்னைக் காதலியாகவும், திருவாரூரில் அமர்ந்தருளும் சிவபெருமானைக் காதலனாகவும் கொண்டு, தன் காதல் நிலையைச் செவிலித்தாய் ஒருத்தி கூறுவதாகத் தன் சிவக் காதலைப் பாடலாகப் பாடுகின்றார்.

ஐயா! என் பெண் நல்ல பருவம் அடைந்தவள்; திருவாரூரில் கோயில் கொண்டுள்ள சிவபெருமான் மேல் காதல் கொண்டாள்; காதல் முற்றி விட்டது; பித்தாகிவிட்டாள்; முதலில் அவனுடைய பெயர்

ஆகிய 'சிவன்'— என்பதை இருசெவியும் குளிரக் கேட்டாள்; பின் அவன் திருவுருவத்தின் அழகு, அமைப்பு, தோற்றம் எல்லாம் கேட்டாள்; மேலும், அவனுடைய ஊர் திருவாரூர் என்பதையும் கேட்டாள்; இவ்வாறு கேட்க, கேட்க, காதல் பெருகிப் பித்தியாகிவிட்டாள்; அந்த நேரத்தில், அப்பொழுதே பெற்ற தாயையும், தந்தையையும் மறந்தாள்; ஊரார் பேசுவார்களே என்ற உலகவழக்கத்தையும் கட்டுப் பாட்டையும், சூழ்நிலையையும் மறந்தாள்; தன்னிலை இழந்தவளாகிய தன்மையை அடைந்து விட்டாள்; தன் பெயர், ஊர் எல்லாம் மறந்து அப் பெருமான் நினைவாகவே ஆகிவிட்டாள்! அவன் திருவடிக்கே தன்னைக் கொடுத்துவிட்டாளே! இவளை என்ன செய்வது! என்று அப்பர் பெருமான் தன் சிவக்காதலை வெளிப்படுத்துகின்றார்,

**''முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள்**
**மூர்த்தி அவனிருக்கும் வண்ணம் கேட்டாள்**
**பின்னை அவனுடைய ஆரூர் கேட்டாள்**
**பெயர்த்தும் அவனுக்கே பிச்சி ஆனாள்**
**அன்னையையும் அத்தனையும் அன்றே நீத்தாள்**
**அகன்றாள் அகலிடத்தார் ஆசாரத்தைத்**
**தன்னை மறந்தாள்தன் நாமம் கெட்டாள்**
**தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே!**

**— திருநாவுக்கரசர்.**

(திருஆரூர்)



# போக யோகத்தன்

உலகில் ஆணும் பெண்ணும் கூடித் திருமண வாழ்வு நடத்துதல் இயற்கை அவ்வாறு நடத்தும் இன்பவாழ்வில் தான் உலகம் நடைபெறுகின்றது அன்பும் அறமும் தழைக்கின்றது; புகழும், செல்வமும் பூக்கின்றது, இத்தகைய திருமண வாழ்வைத் தான் போகவாழ்வு எனப்புகல்வர் பெரியோர்கள். இத்திருமண வாழ்வில் இருந்து கொண்டே மெய்யுணர்வு அடைய முயற்சி செய்யவேண்டும். இறையோடு ஒன்றப் பயிற்சி செய்ய வேண்டும். இதனை யோக வாழ்வு என்று கூறுவர். போல வாழ்வானது யோக வாழ்விற்குத் துணை செய்யுக. என்ற தத்துவத்தை விளக்கவே இறைவன் அம்மையோடு கூடிய போகவடிவினனாகவும், தவநிமையோடு கூடிய யோகவடிவினனாகவும் காட்டி நம்மை வழிநடத்துகிறான் எனக் கூறுகிறார் திருஞான சம்பந்தர்.

எல்லாம் வல்ல சிவபெருமான் திருநல்லூர்ப் பெருமணத் திருக்கோயிலில் உறைபவன்; அவன்

மேகத்தை ஒத்த இருண்ட திருநீலகண்டத்தை உடையவன்; திருவெண்ணீறு அணியப் பெற்ற உமையம்மையைத் தன் திருமேனியில் ஒரு பாகத்தில் கொண்டவன்; இவ்வாறு உலகம் நடைபெற உலகில் உயிர்கள் ஆண்பெண்ணுய்க் கூடித் திருமண வாழ்வு நடத்துதற் பொருட்டுப் போக வடிவினனுய்க் காட்சிதருபவன். மேலும் பாய்கின்ற புலியின் தோலை ஆடையாக அணிபவன் அந்த ஆடையோடு சேர்த்துப் பாம்பினைக் கட்டிய தவ உருவினன் உலகவாழ்வில் உயிர்கள் உய்யும் பொருட்டு, போக வாழ்விலிருந்தே வீட்டு நெறியை அடைதற் பொருட்டு யோக வாழ்வினைப் பெற; இவ்வடிவைக் காட்டி வழிநடத்தி அருள்புரிகிருன் என்பர்.

**மேகத்த கண்டன்; எண்**
**தோளன்; வெண் ணீற்றுமை**
**பாகத்தன்; பாய்புலித்**
**தோலொடு பந்தித்த**
**நாகத்தன்; நல்லூர்ப்**
**பெருமணத் தான்; நல்ல**
**போகத்தன் யோகத்தை**
**யேபுரிந் தானே!**

— திருஞானசம்பந்தர்
(திருநல்லூர்ப் பெருமணம்)



# ஆடும் அழகன்

உலகம் நடைபெற வேண்டும்; உயிர்களின் இயக்கம் இடையருது இயங்கவேண்டும். இவ்வாறு, உலகம் இயங்கி உயிர்களின் வாழ்வு நடைபெற இறைவன் திருச்சிற்றம்பலத்தே நடனம் ஆடிக்கொண்டே இருக்கின்ருன். அவன் அசைவு உலகை இயக்குகின்றது என்று நூல்கள் கூறுகின்றன.

தமிழர்கள் அழகுக்கு ஒருவடிவம் கொடுக்க எண்ணினர்கள்; கூத்தப்பிரான் திருவுருவைக் கலை வடிவமாக உலகுக்கு அளித்தார்கள்; அக்கலை வடிவத்தில் தத்துவமும் ஒளிவீசச் செய்தார்கள்; இறை தத்துவமும் ஐவகைத் தொழிலைக் கொண்டது என்றனர்; இறைவன், படைத்தல் காத்தல் ஒடுக்கல் மறைத்தல் அருளல் என்னும் ஐவகைத் தொழிலை இவ்வுலக உயிர்களின் பொருட்டுச் செய்கின்ருன்; மேலும் அவ்வவ்வுயிர்களின் வினைகளுக்கேற்ப நன்மை தீமைகளை ஈந்தும் அருள்புரிகின்ருன் என்றனர்.

இத்தத்துவத்தை உள்ளடக்கிய உருவமாக நடராசவடிவத்தைத்தொழுது வணங்கினர். தமிழர்கள் அவ்வடிவத்தை மந்திரமொழியான ஐந்தெழுத்தின்; வடிவமாகவும் கண்டனர். அவ்வடிவ அழகில் தன்னைமறந்து பாடுகின்றார் அப்பர்பெருமான்.

அழகன் ஆடுகின்றான். அருள் பொழியும் அவன் திருமுகத்தில் வளைந்துகிடக்கின்றது புருவம்; அவன் திருவாய் கோவைப்பழம் போல் சிவந்து காணப்படுகின்றது; அத்திருவாயில் புன்சிரிப்பு அரும்புகின்றது, அப் புன்சிரிப்பு, இவ்வுலகைப் படைக்குந் தொழிலை நினைவூட்டுகின்றது. தலையில் குளிர்ந்த திருச்சடை அமைந்திருக்கின்றது; அக் குளிர் சடை இவ்வுலகைக் காக்குந்தொழிலைக்குறிக்கின்றது. அவன் திருமேனி பவளம் போன்று செம்மை நிறம் காட்டுகின்றது; அக்குறிப்பு மறைத்தல் தொழிலையும்.அத்திருமேனியில் வெண்மைத்திருநீறு விளங்குவது ஒடுக்கல் தொழிலையும் அல்லவா காட்டுகின்றது. மேலும், உள் நினைந்து கைதொழுவார்களை ஆட்கொள்ள எடுத்த பொற்பாதம் அருளின் வடிவாய் அருளும் தொழிலைச்செய்கின்றது. இவ்வாறு ஐவகைத்தொழில் வடிவாய், ஐந்தெழுத்தின் திருவுருவாய் உலகை நடத்தும் இவ்வழகு உருவைக் காணப் பெறுவதற்காகவே, இவ்வுலகப் பிறவியாகிய மனித்தப் பிறவியும் உண்மையில் வேண்டியது தான் என்பர் அப்பர் பெருமான்.

குனித்த புருவமும் கொவ்வைச்செவ்
வாயிற் குமிண் சிரிப்பும்

பனித்த சடையும் பவளம்போல்
மேனியிற் பால்வெண்ணீறும்

இனித்த முடைய எடுத்தபொற்
பாதமும் காணப் பெற்றால்

மனித்தப் பிறவியும் வேண்டுவ
தேயிந்த மாநிலத்தே!

— திருநாவுக்கரசர்
(கோயில்)

**குறிப்பு :** நடராசவடிவம் ஐவகைத் தொழிலைக் காட்டுகின்றதுத அவ்வடிவத்தின் திருக்கையிலிருக்கும் உடுக்கை-படைப்பையும், அபய முத்திரை-காத்தலையும். எரிசுடர்-ஒடுக்கலையும். ஊன்றியதிருவடி-மறைத்தலையும், தூக்கியதிருவடி-அருளலையும் காட்டுகின்றது என்பர்.



# அடைக்கல நெறி

பத்தி நெறியின் உச்சநிலைதான் அடைக்கல நெறியாகும். தன்முனைப்பு அழிந்து எல்லாம் இறைவன் திருவருளால் இயங்குகின்றது என்று எண்ணி, எவனொருவன் இறைவன்பால் சரணடைகின்றானோ அவனே இறையருள் சித்திக்கப் பெற்றவன் ஆகின்றான். இத்தகைய அடைக்கல நெறியைப் பெரிதும் சைவசித்தாந்தம் வலியுறுத்தும். இதனை "சரணாகதி தத்துவம்" என வடநூலார் புகல்வர் "முக்குணமயமான எனது தெய்வீக மாயை கடத்தற்கரியது; என்னையே சரணடைபவர்கள் எவர்களோ அவர்களே இம்மாயையைத் தாண்டுவர்", என்பது "கீதை"யின் திருமொழி!

இவ்வாறு எல்லாம் சிவன் செயல் என்று எண்ணி அடைக்கலம் புகுந்தவர் திருநாவுக்கரசர் ஆவார். அவர் வேறு எதனையும் உறுதுணையாகக் கொள்ளாது, இறைவன் ஒருவனையே உறுதுணையாகக் கொண்டவர். அதனை இப்பாடலில் உணர்த்துகின்றார்.

அழகிய தில்லைச் சிற்றம்பலத்தே, உலகம் நடைபெறவும், உயிர்களின் இயக்கம் நடைபெறவும் திருநடனம் புரியும் சிவபெருமானே! வினைகள்வந்து என்னை வருத்துகின்றன; அவ்வினைகளை ஓட்டும் படைக்கலமாக உன் திருநாமமாகிய ஐந்தெழுத்தை என் நாவில் கொண்டேன்; அதனையே நாள்தோறும், ஒவ்வொருநிமிடமும் கூறி உருகிநிற்கின்றேன்; நான் என்ன மட்பாண்டமா! உன்னை நினையாமல் இருப்பதற்கு! ஏழுபிறப்புகள் நீ தந்தாலும் நான் உன் திருவடிக்கு ஆட்செய்கின்றேன்! நீ என்னைக் கைவிட்டாலும், புறக்கணித்தாலும் உன்னை விட்டுப் போகேன்; தூய்மையான திருநீற்றை அணிந்து என் அழுக்குகளைப் போக்கிக் கொள்வேன்; என் உள்ளம் - உரை - செயல் ஆகிய மூன்றையும் உன்பால் ஒப்படைத்துத் தொழுகின்றேன்; நீயே கதியென்று அடைக்கலம் கேட்கின்றேன். கண்திறந்து காண்பாயாக! — எனக் கூறுகின்றார்.

**படைக்கல மாகஉன் நாமத்**
**தெழுத்தஞ்சென் நாவிற்கொண்டேன்**
**இடைக்கலம் அல்லேன் எழுபிறப்**
**பும்உனக்காட் செய்கின்றேன்**
**துடைக்கினும் போகேன் தொழுது**
**வணங்கித்தூ நீறணிந்துன்**
**அடைக்கலம் கண்டாய் அணிதில்லைச்**
**சிற்றம் பலத்தரனே!**

— திருநாவுக்கரசர்
(கோயில்)



# அன்பே சிவம்

மனித வாழ்க்கையில் பல்வேறு உணர்ச்சிகள் தோன்றுகின்றன. அவ்வுணர்ச்சிகளுக்கெல்லாம் தலைசிறந்து நிற்கும் உணர்ச்சி அன்பு உணர்ச்சி ஆகும். ஏனென்றால் எப்பொருளை அன்புணர்ச்சி பற்றுகின்றதோ, அப்பொருளோடு அது ஐக்கியமாகிக்கலந்து விடுகின்ற தன்மையைப் பார்க்கலாம். இத்தகைய அன்புணர்ச்சியை இறைவன் பால், செலுத்தித் தொழ வேண்டும் 'அன்பே சிவம்'— என்பது திருமந்திர மொழியாகும். அன்புணர்வு, மறைந்தருளும் இறைஅருளைமிக எளிதாகப் பற்றி நமக்கு உரிய உறவுப் பொருளாக ஆக்கிவிடும் என்று கூறுகின்றார் அப்பர் பெருமான். மேலும், நம் மனத்தகத்தே எழும் மாறுத நிலைத்த பத்தியைக் கோலாக நட்டு, காதலாகிக் கசியும் அன்பு உணர்வில் கடைந்தால், மறைந்து நிற்கும் இறைவன் வெளிப்பட்டு நமக்கு அருள்புரிவான் என்றும் கூறுவர்.

அழகிய இரத்தினக் கற்களைப் போன்று ஒளி விடும் சோதிவடிவினன் சிவபெருமான்; அவன் விறகினுள் மறைந்து நிற்கும் நெருப்பைப் போன்றவன்; பாலினுள் மறைந்து நிற்கும் நெய்யைப் போன்றவன், அவ்விறைவனை வெளிப்படுத்தி அவன் அருளைப் பெறவேண்டும்! அதற்கு நம் மனத்தினுள்ளே மாறாத பத்தியை உறவு நிலையில் கோலாக நட்டுக் காதலாகிக் கசியும் அன்பு உணர்வில் கடைய வேண்டும். அவ்வாறு கடையும் பொழுது, கயிறு முன்பின் சென்று வருவ போன்று இன்ப துன்ப நிகழ்ச்சிகள் நிகழ்வுறும். அத்தகைய சோதனையிலும் நாம் உறுதியாக அன்பு செலுத்த வேண்டும். அத்தகைய தூய அன்பானது இறையருளை மிக எளிதாகப் பற்றும், விறகில் மறைந்தொளிரும் நெருப்பினை வெளிப்படுத்துதல் போன்றும், பாலினுள் மறைந்திருக்கும் நெய்யை வெளிப்படுத்தல் போன்றும், உள்ளத்தே மறைந்தருளும் இறையை இவ்வன்பு வெளிப்படுத்தி உறவு கொள்ளச் செய்யும் எனப் பகர்வர் அப்பர்.

**விறகில் தீயினன்**
**பாலிற்படு நெய்போல்**
**மறைய நின்றுளன்**
**மாமணிச் சோதியான்**
**உறவு கோல்நட்டு**
**உணர்வு கயிற்றினால்**
**முறுக வாங்கிக்**
**கடையமுன் நிற்குமே!**

— திருநாவுக்கரசர்
(திருக்குறுந்தொகை)



# கருணை நெறி

வாழ்வில், பிறரிடம் எவ்வகைப் பயனையும் எதிர்பாராமல், உதவிசெய்வதைக் கருணை எனக் கூறுவர். அத்தகைய கருணையாளன் இறைவன் என்று மொழிகின்றார் அப்பர் பெருமான். ஒருசிறிதும் ஒருபொழுதும் நினையாதிருக்கும் பொழுதும் எளியனாகிய என்பால் அருள் பொழிந்து காத்த கருணை மிக்கவன் இறைவன் என்று கூறுகின்றார்; மேலும் அக்கருணை உணர்வை எண்ணி உருகுகின்றார்.

திருவாரூரில் கோயில் கொண்டுள்ளவன் சிவபெருமான்; அவன் எலும்பைத் தோற்றுவித்தவன்; அதைச் சுற்றி நரம்புகளை வைத்து அவற்றின் மேல் தோலைப் போர்த்தி என்னை அழகு உருவமாகப் படைத்து விட்டான்; என்பால் அன்பினைப் பெய்து இன்பத்தைத் தந்தான்; அது மட்டுமா! முன்பிருந்த பழவினைகளையும் தீர்த்துக் காத்தான். பிறகு என்னைத் தூய்மையாக்கினான்; என் உள்ளத் திருக்கோயிலில் என்றும் வீற்றிருந்து அருளைப்

பொழிகின்ருன். இவ்வாறு எவ்வகைப் பயனுமற்ற என்னையும் பொருட்படுத்திக் கருணையைப் பொழிந்த அவ்விறைவனை, நாளும் நினைந்து போற்றவேண்டுமல்லவா! அவ்வாறு அவன் கருணைநிதியைப் போற்ருத பாவியானேன்; இச் செயலானது, உடனிருந்து உதவும் முயலைக் கைவிட்டு, உதவாது ஓடிப் போகும் காக்கையைப் பின் தொடர்ந்த செயலாக அல்லவா ஆகிவிட்டது. என்னே என் அறியாமை! இவ்வாறு தன் அறியாமையை நினைந்து வருந்துகின்ருர் திருநாவுக்கரசர்.

**என்பிருத்தி நரம்புதோல் புகப்பெய்திட்டு**
**என்னையோர் உருவ மாக்கி**
**இன்பிருத்தி முன்பிருந்த வினைதீர்த்திட்டு**
**என்னுள்ளம் கோயி லாக்கி**
**அன்பிருத்தி அடியேனைக் கூழாட்கொண்டு**
**அருள் செய்த ஆரூரர்தம்**
**முன்பிருக்கும் விதியின்றி முயல்விட்டுக்**
**காக்கைப்பின் போனவாறே!**

— திருநாவுக்கரசர்
(திருவாரூர்)



# உயிருக்கு உயிரானவன்

நம்முடைய அழகிய உடலை, அவ்வுடலுக்குள் உயிர் நின்று இயக்குகின்றது; அதுபோல, அவ்வுடலுக்குள் இருக்கும் உயிரை, அவ்வுயிருக்குள் உயிராக நின்று இறைவன் இயக்குகின்றான். ஆக இறைவன் உயிருக்கு உயிரானவன் எனச் சைவ சித்தாந்தம் கூறும். இக்கருத்தினை மிக அழகாகக் கூறுவர் திருஞானசம்பந்தர்.

எல்லாம் வல்ல இறைவன் இவ்வுலகை நடத்த உயிர்களைப் படைக்கின்றான்; பறப்பன, ஊர்வன, விலங்கினங்களாகிய உயிரினங்கள், முதலியவற்றையும் படைக்கின்றான்; மனிதர்களையும் படைக்கின்றான்; இவ்வாறு புகழ்சேரும் எண்பத்து நான்கு நூறாயிரம் உயிர் இனங்களைக் கருவாக்கி வளர்க்கின்றான்; முதலில் உடல்களைப் படைக்கின்றான்; பின் அவ்வுடல்கள் இயங்க உயிர்களைத் தோற்றுவிக்கின்றான்; பின் அவ்வுயிர்கள் இயங்க, அவ்வுயிர்க்குள் உயிராகத்தானே நின்று இயக்குகின்றான்; இவ்

வாறு இயக்கும் இறைவன் இவ்வுலகில் அமரும் கோயில் எது தெரியுமா! மலையுச்சியைச் சேரும் மேகங்கள் முழங்குகின்றன; அம்மேகங்களைக் கண்டு மயில்கள் நடமாடுகின்றன; வண்டுகள் மகிழ்வால் பாடுகின்றன; மணம் பொருந்திய பொன் நிற மெல்லிய கூந்தல் மலர்கள் கைபோல் குவித்து ஆடுகின்றன; இவ்வாறு இயற்கை வளம் பொருந்திய ஊர் திருவீழிமிழலையாகும். அத்திருநகரில் அவ்விறைவன் வீற்றிருக்கின்ருன் என்று கூறுகின்ருர் ஞானசம்பந்தர்.

**உரைசேரும் எண்பத்து நான்குநூ**
**றுயிரமாம் யோனி பேதம்**
**நிரைசேரப் படைத்தவற்றின் உயிர்க்குயிராய்**
**அங்கங்கே நின்ருன் கோயில்**
**வரைசேரும் முகில்முழவ மயில்கள்பல**
**நடமாட வண்டு பாட**
**விரைசேர்பொன் இதழிதர மென்காந்தள்**
**கையேற்கும் மிழலையாமே!**

**— திருஞானசம்பந்தர்**
(திருவீழிமிழலை)



# கோளறு பதிகம்

உலக வழக்கில், நாளும், கோளும் சரியாக அமையவில்லை என்று மக்கள் சொல்லுவார்கள்; கோள்கள் சரியாக அமையாத காலத்து, அதனால் ஏற்படும் தீங்கினை உணர்கின்றோம் என்றும் கூறு வார்கள்; சோதிடர்களை அணுகி அக்கலையை ஆய்வார்கள். ஆனால், எல்லாம் வல்ல சிவ பெருமானை உள்ளத்தே நினைந்துருகும் மெய் யடியார்களுக்குக் கோள்கள் எல்லாம் நல்லனவே என்றும் அவை எவ்விதத் தீங்கினையும் செய்யா என்றும் உரைப்பார் திருஞானசம்பந்தர்; மேலும் எல்லாக் கோள்களுமாகி வீற்றிருப்பவன் சிவ பெருமானே என்று கூறி, ''கோளறுபதிகம்'' பாடி யுள்ளார் சம்பந்தர்.

மூங்கில் போன்ற திருத்தோள்களை உடையவள் உமையம்மை; அவ்வம்மையைத் தம் திருமேனியில் பாதியாகக் கொண்டவன் சிவபெருமான். அவன் உயிர்களின் நன்மையின் பொருட்டு, ஆலகால

விடத்தை உண்டு அதனைத் தன்னுடைய கழுத்திலே தங்க வைத்தவன், உலக உயிர்களின் வளர்ச்சிக்கு உறுதுணையாக, இனிமையுறு வீணையை மீட்டுகின்றான் சிவபெருமான். வீணையை மீட்டி வீணா தட்சிணாமூர்த்தியாகக் காட்சியளிப்பவன்; குற்றமற்ற திங்களையும், கங்கையையும் தன் தலையில் அணிபவன்; இத்தகைய வடிவத்தோடும், பேரன்போடும் என் உள்ளத்தில் புகுந்து தங்கியிருக்கின்றான். அவன் எளிமையாக என் உள்ளத்தே கோயில் கொண்டிருப்பதனால், கோள்களாகிய ஞாயிறு, திங்கள், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி, ராகு, கேது முதலியன தீங்கு செய்யாது நல்லனவற்றை நாளும் அருளும்; அவை நல்லனவாக அமையும் சிவபெருமானின் மெய்யடியார்களுக்கு அவை மிகவும் நன்மை பயப்பனவாகவே அமையும் என்று கூறுகின்றார் திருஞானசம்பந்தர்

**வேயுறு தோளிபங்கன் விடம்உண்ட கண்டன்**
**மிகநல்ல வீணை தடவி**
**மாசறு திங்கள்கங்கை முடிமேல் அணிந்துஎன்**
**உளமே புகுந்த அதனால்**
**ஞாயிறு திங்கள் செவ்வாய் புதன் வியா**
**ழன் வெள்ளி**
**சனிபாம்பு இரண்டும் உடனே**
**ஆசறு நல்ல நல்ல அவைநல்ல நல்ல**
**அடியார் அவர்க்கு மிகவே!**

— திருஞானசம்பந்தர்
(கோளறு பதிகம்)



# சிவனடியார் பெருமை

சிவனைத் துதிக்கும் மெய்யடியார்கள் தங்கள் வாழ்வில் நிகழும் இன்பத்தையும் துன்பத்தையும் சிவபெருமானுக்கே விடுத்து வாழ்பவர்கள்; எல்லாம் சிவமயம் என்று எண்ணுபவர்கள்; மண் ஓட்டையும், செம்பொன்னையும் ஒன்ருகவே மதித்து வாழ்பவர்கள்; உயிர்களிடத்து நிறைந்த அன்புடையவர்கள்; சிவனை அன்புமயமாகவே கண்டு பேரன்போடு வழிபடுபவர்கள்; அவன்பால் காதலாகி, அவனுக்கு ஆற்றும் தொண்டில் பெருவிருப்பம் உடையவர்கள். இத்தகைய சிவனடியார்கள் எல்லோருக்கும் நான் அடியவன் எனத் தன்னை எளிமையாகக் காட்டி அடியார் பெருமையைப் போற்றுகின்ருர் சுந்தரர். சிவபெருமான் அடியார் உள்ளத்தே இருப்பதனுல், சிவனடியார் பெருமை மிக்கவர்கள் என்ற உண்மையைக் கூறவே திருத்தொண்டத்தொகை என்ற பதிகம் பாடியுள்ளமையை நாம் காணலாம்.

திருவாரூரில் அமர்ந்தருளும் சிவபெருமானுக்கு, நம்பி ஆரூரனாகிய நான் அடியவன். சிவபெருமானை உள்ளத்தே நினைந்து பேரன்போடு பணியும் பக்தர்கள் யாராயிருந்தாலும், அவர்களுக்கெல்லாம் நான் அடியவன்; தங்கள் வாழ்வில் எல்லாம் சிவனருளாலே நடைபெறுகின்றது என எண்ணித், தங்கள் மனத்தை அவன்பால் வைத்துத் துதிப்பவர்கள் எல்லோருக்கும் நான் அடியவன்; தமிழ்நாட்டில், சிறப்பாக அவன் விரும்பிக் கோயில் கொண்டிருக்கும் இத்திருவாரூர்த் திருத்தலத்தில் பிறந்தவர்கள் எல்லோருக்கும் நான் அடியவன் நாள்தோறும், காலை-மதியம்-மாலை என்ற முக்காலங்களிலும் சிவபெருமான் திருமேனியைத் தொட்டுத் திருத்தொண்டு செய்யும் அருச்சகர்கள் எல்லோருக்கும் நான் அடியவன்; பெருமைமிக்க திருநீற்றைப் பூசி அணியும் தவத்தினராகிய முனிபுங்கவர்கள் எல்லோருக்கும் நான் அடியவன்; சிவன் வீற்றிருக்கும் தென்னாட்டிற்கும் புறத்தே வாழும் சிவனடியார் எல்லோருக்கும் நான் அடியவன் ஆவேன் என்று கூறுகின்றார் திரு சுந்தரர்.

பத்தராய்ப் பணிவார்கள் எல்லார்க்கும் அடியேன்
பரமனையே பாடுவார் எல்லார்க்கும் அடியேன்
சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார்க்கு அடியேன்
திருஆரூர்ப் பிறந்தார்கள் எல்லார்க்கும் அடியேன்
முப்போதும் திருமேனி தீண்டுவார்க்கும் அடியேன்
முழுநீறு பூசிய முனிவர்க்கும் அடியேன்
அப்பாலும் அடிசார்ந்தார் அடியார்க்கும் அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக்கு ஆளே!

— சுந்தரர்

திருத்தொண்டத் தொகை
(திருஆரூர்)

# திருவடிக் காதல்

விருப்பு வெறுப்பு இல்லாதவன் இறைவன்: அவனுடைய திருவடிகளை உள் நினைந்து உருகி வழிபடுபவர்களுக்கு எப்பொழுதும், எவ்விடத்தும், எந்த நிலையிலும் துன்பங்கள் இல்லை என்று திருவள்ளுவர் கூறுகின்றார்.

'வேண்டுதல் வேண்டாமை இலான்அடி சேர்ந்தார்க்கு
யாண்டும் இடும்பை இல' - என்பது திருக்குறள்

நாவுக்கரசர் இறைவன் திருவடியில் ஆராத காதல் பூண்டிருந்தவர். தம் செயல்கள் யாவும், அவன் திருவடிச் சிறப்பால் நிகழ்கிறது என்று கூறுகின்றார். தம் மனத்திலுள்ள பாசத்தை நீக்கி, அத்திருவடி, அவன்பால் பணி செய்யத் தம்மை ஊக்குவிக்கின்றது என்று கூறுவார். அதனால், தாம் எந்தப் பிறவி எடுத்தாலும், இறைவன் திருவடி தன் மனத்தகத்தே பதிந்து இருக்க வேண்டுமென்று இறைவனை நோக்கி வரம் வேண்டுகின்றார்.

காதலாகிக் கசிந்து தொழுபவர்களுக்கு இரங்கி அருள் செய்பவன் இறைவன், அத்தகைய இறைவன் திருப்பாதிரிப் புலியூரில் வீற்றிருக்கின்ருன். வளமைமிக்க கங்கையைச் சிவந்த சடையின் மேல் வைத்துக்கொண்ட தீவண்ணனே! புண்ணியனே! இவ்வுலகத்தே புழுவாக நான் பிறந்தாலும், உன் திருவடிகள் என்னுடைய மனத்திலே வழுவாது நிலைக்க வரந்தர வேண்டும் என்று வேண்டுகின்ருர்.

**புழுவாய் பிறக்கினும் புண்ணியா**
**உன் அடி என்மனத்தே**
**வழுவா திருக்க வரந்தர**
**வேண்டும் இவ்வையகத்தே**
**தொழுவார்க் கிரங்கி யிருந்தருள்**
**செய்பா திரிப்புலியூர்ச்**
**செழுநீர்ப் புனற்கங்கை செஞ்சடை**
**மேல்வைத்த தீவண்ணனே!**

—திருநாவுக்கரசர்
(திருபாதிரிப் புலியூர்)



# திருவடித் தேன்

நாவுக்கரசருக்கு இறைவன் திருவடிகள் தேனைப் போன்று இனிக்கின்றன. அத்திருவடிகள் வாழ்வுச் செல்வங்களை மட்டுமல்ல வீட்டு நெறியையும் தரும் என்று உறுதியோடு கூறுகின்றார். இறைவன் திருவடியில் அத்துணை நம்பிக்கை!

திருவையாற்றில் கோயில் கொண்டவன் சிவ பெருமான். அவன் ஆடும்பிரானாகக் காட்சி தருவான். பாம்பையும், மாலைக்காலப் பிறையையும் அணியாகப் பூண்டவன். அவனுடைய திருவடிகளோ யாரும் எளிதில் சிந்திக்க முடியாதன; ஒருவாறு முழுமனத்தோடு சிந்தித்துப் பழகி விட்டாலோ, மிக விரைவில், அவா—அறியாமை—பிறவித்துன்பம் முதலிய இடர்களைப் போக்கிச் செம்மை பெறச் செய்யும்; ஞானத்தேனைப் பொழியும்; பிறவி நிலையைக் களைந்து, வீட்டு நெறியைக் கொடுக்கும்; நெருக்கமாக அறியாமை இருட்டிலே தள்ளிக் கட்டுப் படுத்தி உழல

வைக்கும் பழைய வினைகளை விலக்கிக் காக்கும் என்பர்.

சிந்திப் பரியன; சிந்திப்
பவர்க்குச் சிறந்து - செந்தேன்
முந்திப் பொழிவன; முத்தி
கொடுப்பன; மொய்த்திருண்டு
பந்தித்து, நின்ற பழவினை
தீர்ப்பன; பாம்புசுற்றி
அந்திப் பிறையணிந்து ஆடும்ஐ
யாறன் அடித்தலமே!

— திருநாவுக்கரசர்.
(திருஐயாறு)



# இறை இயல்பு

இறைவன் உயிர்களைப் படைக்கின்ருன்; அவ்வுயிர்களைக் காக்கின்ருன்; வீடுபேற்றிற்கு உரியவையாக ஆக்குகின்ருன். இவ்வாறு படைத்துக் காத்து வீடு பேற்றிற்கு உரியவையாக்குவதற்கு அவன் அவ்வுயிர்களோடு ஒன்றி நின்று வாழ்கின்ருன்; உயிர்களை விட்டு விலகி நின்று வேருக வழி நடத்துகின்ருன். இத்தகைய இயல்புக்கேற்ப இவ்வுலகப் பொருள்களுமாகி நிற்கின்ருன் என்று சைவ சித்தாந்தம் மிகத் தெளிவாகக் கூறும். இதனை,

''உலகெலா மாகி வேருய்
உடனுமாய் ஒளியாய் ஓங்கி
அலகிலா உயிர்கள் கன்மத்
தாணையின் அமர்ந்து செல்லத்
தலைவனுய் இவற்றின் தன்மை
தனக்கெய்தல் இன்றித் தானே
நிலவுசீர் அமல னுகி
நின்றனன் நீங்காது எங்கும்''

— சிவஞானசித்தியார்

என்று அருள்நந்தி சிவாசாரியார் கூறுவர்.

இறைவன் நிலம், நீர், தீ, காற்று வான், கதிரவன் மதி, உயிர் ஆகிய எட்டுப் பொருள்களாய், எல்லாம் ஆன உலகமாய்க் காட்சி தருகின்றன்; உயிர்களைப் படைக்கின்றன்; அவ்வுயிர்கள் உய்யும் பொருட்டு உயிருக்குள் உயிராகவும் நின்று உயிர்களை இயக்குகின்றன். பொருள்களோடு பொருள்களாய் இருந்தும் விளங்குகின்றன். இதனை "**உடனுயிருக்கும் நிலை**" அஃதாவது கூடிநிற்கும் நிலை, ஒன்றிநிற்கும் நிலை என்று சைவம் கூறும்.

அடுத்து, நம் கண்கள் ஒளிபெற்றுத் திகழ் கின்றன. இயற்கையில் கதிரவன் ஒளியும் ஒளி விடக் காணுகின்றோம்; ஆனல் கண்ஒளியும் கதிரவன் ஒளியும் கலக்கும் பொழுதுதான் இவ் வுலகப் பொருள்களை நாம் நன்கு காணமுடிகின்றது. கண் ஒளி, கதிரவன் ஒளி இரண்டு ஒளிகளும் வேறு வேருகவும் இருந்து, பின் ஒன்றிச் செயல்படும் பொழுதுதான் உணருகின்ற ஒளி பிறக்கின்றது. இது போல, உலகம் நடைபெற இறைவன் உயிர்களை விட்டுவிலகி, வேருகவே நின்று, செயலில் ஒன்று பட்டு உணரவைக்கின்றன். இவ்வாறு "**வேரு யிருந்து**" உலகை நடத்தும் நிலையையும் சைவம் வலியுறுத்தும்.

ஆக, பந்துக்குள் காற்று இருக்கின்றது. பந்துக்கு வெளியிலும் காற்று இருக்கின்றது. அதுபோல இறைவன் உயிருக்குள் உயிராக ஒன்றி நின்றும், உயிரை விட்டு விலகி வேருகி நின்றும், உலகை நடத்துகிறுன். இவ்வாறு இருநிலையில் விளங்கும் இறைவன் இயல்பை நன்கு எடுத்துக் காட்டு கின்றுர். நாவுக்கரசர்.

நிமிர்ந்த பொன்போன்ற சடையையுடைய சிவ பெருமான் பெரிய நிலமாகவும், நெருப்பாகவும்,

நீராகவும், வீசுகின்ற காற்ருகவும், வானகமாகவும் ஒளிர்கின்ருன். இவ்வுலக உயிர்களாகவும் உலவு கின்ருன்; வானில் அரிய நிலையில் ஈர்ப்பாற்றலால் நின்று ஒளிவிடும் ஞாயிருகவும், திங்களாகவும் திகழ் கின்ருன். இவ்வாறு இவ்வெட்டுப் பொருளாகி அப்பொருள்களோடு ஒன்றி உடனுகி அப்பொருள்களை இயக்குகின்ருன். மேலும். இவ் வுலகு நடப்பதற்கு ஆண், பெண் வடிவம் தாங்கி யும், புல்லாய், புழுவாய், பறவையாய், பாம்பாய், பேயாய், கணங்களாய்ப் பல்வேறு உயிர் வடிவங் கள் தாங்கியும் வாழ்கின்ருன். இவ்வுயிர்க் கூட்டங் கள் உய்யும் பொருட்டு இழைத்த குற்றங்களைத் திருத்தும் குணவாளனுக நின்றும், திருந்திய உயிர் களுக்கு வீடுபேற்றை நல்கும் நன்மையாளனுக நின்றும் அருள்புரிகின்ருன். இவ்வாறு உயிர்க்கூட் டத்தினின்றும் விலகி வேருகவே நின்றும், உயிர் களின் வாழ்க்கைக்குத் துணை செய்கின்ருன். மேலும் நேற்று என்னும் காலமும், இன்று என்னும் காலமும் நாளை என்னும் காலமும் ஆக மூன்று வகைப்பட்ட கால தத்துவமாகவும் நின்று இவ்வுலகை இயக்கு கின்ருன். என்னே இவ்விறைவனது இயல்பு என்று வியந்து போற்றுகின்ருர் நாவுக்கரசர்.

> ‘இருநிலனுய்த் தீயாகி நீரு மாகி
> இயமான னுய்எறியும் காற்று மாகி
> அருநிலைய திங்களாய் ஞாயி ருகி
> ஆகாச மாய்அட்ட மூர்த்தி ஆகி
> பெருநலமும் குற்றமும் பெண்ணும் ஆணும்
> பிறருருவும் தம்முருவும் தாமே ஆகி
> நெருநலையாய் இன்ருகி நாளை யாகி
> நிமிர்புன் சடைஅடிகள் நின்ற வாறே!’

— திருநாவுக்கரசர்
(நின்ற திருத்தாண்டகம்)

# முப்பொருள் தத்துவம்

உலகில் பிறந்த மக்கள் இன்ப துன்ப நிகழ்ச்சிகளை அனுபவிக்கின்றார்கள்; அவ்வின்ப துன்பங்களில் மூழ்கி மயங்கி இறைவனை அறியாது உழல்கின்றார்கள்; அத்தகைய மயக்கத்தை, மக்களுக்கு உணர்த்தி இறைஅறிவை வழங்குவதற்கு வழிகாட்டியாக அமைந்தனவே சமய நெறிகளாகும். அச்சமயநெறிகளுக்குள் மிகப்பழமையான நெறி சைவசித்தாந்த நெறியாகும், அந்நெறி புகட்டும் உண்மைதான் முப்பொருள் தத்துவமாகும்.

உயிர்கள் ஆணவம்-கன்மம்-மாயை என மூம்மலங்களால் சூழப்பட்டுத் தடுமாறுகின்றன; அந்த மலங்களை நீக்கி இறையாகிய தலைவனை அடைய உயிர்களுக்கு வழிகாட்டும் தத்துவந்தான் முப்பொருள் தத்துவம். அதனை பதி-பசு-பாசம் என்றும், இறை-உயிர்-தளை என்றும் மொழிவர். இத்தத்துவ உண்மையை நமக்கு வடித்து அருளினார் திருஞானசம்பந்தர்.

இவ்வுலகில் பிறந்தஉயிர்கள், இவ்வுலகப் பொருள்களைக் கண்டு மயங்குகின்றன; அப்பொருள்கள் தருகின்ற இன்பத்தையே பேரின்பமாக நச்சுகின்றன; அப்பொருள்கள் தோற்றுவிக்கும் மாயைகளையே உண்மை என்றும் நிலையானது என்றும் கருதுகின்றன, மேலும் அம்மாயையால் விளையும் பயன்களை நன்மையானவை என்று எண்ணித் தடுமாறுகின்றன. உண்மையில், இவ்வுயிர்களுக்கு அறியும் சக்தி இல்லை. அறியும் சக்தியை விலக்கி அறியாமையைக் கொடுத்து ஆள்வது ஆணவ மலமாகும்.

அடுத்து, அவ்வுயிர்கள் ஆசைவழியே தத்தம் வாழ்வை நடத்துகின்றன. ஆசைமுன் செல்ல, வினை விளைக்கும் வேதனையை அனுபவித்துக் கொண்டு உயிர்கள் பின்செல்கின்றன, இத்தகைய அமைப்பினை ஆன்மாக்களுக்குத் தருவது கன்ம மலமாகும்,

மேலும் கண்முன் காணுகின்ற வாழ்வு நிலையானதல்ல என்று தெரிந்திருந்தும், அனுபவிக்கும் இன்பம் உண்மையில் இன்பமில்லை என்று தெரிந்திருந்தும் அவற்றில் மூழ்கும் மயக்கத்தை ஊட்டுவது மாயை எனும் மலமாகும்.

இவ்வகையில் உயிர்கள், இறைவனைக்காண வொட்டாது, மும்மலங்களால் ஆன திரைகள் மறைத்துக் கொண்டிருக்கின்றன; இறை அருளால் உள்ளம் ஒரு நிலைப்பட்டு ஞானத்தைப் பெருமானல் அந்த ஞான ஒளிமுன், மும்மலங்கள் என்னும் இருள் திரைகள் தாமாகவே அகன்றுவிடுகின்றன! பின் பதியாகிய இறைவனைக் காணல்கூடும். இவ்வாறு பாசங்களாகிய திரைகள் அகலப் பெற்றுப் பதியாகிய இறையைக்கண்டு ஆன்மாக்கள்

இன்புறலாம், இத்தகைய இறைவன் இவ்வுலகில் உறையுமிடம் எதுதெரியுமா! நாள்தோறும், நம்முடைய அயர்வினை அகற்றி ஒளிதருகின்ற கதிரவனைப்போன்ற ஆயிரம் கதிரொளியை உடையவன்தான் அவ்விறைவன்; அவன் உறையுமிடம் இளையமதி தவழும் மிகஉயர்ந்த ஊராகிய திருமுதுகுன்றமாகும் எனக் கூறுகின்றார் திருஞானசம்பந்தர்.

விளையாத தொர் பரிசில்வரு
பசுபாச வேதனைஒண்
தளையாயின தவிர அவ்வருள்
தலைவன்ன துசார்பாம்;
களையார்தரு கதிராயிரம்
உடைய அவனொடு
முளைமாமதி தவழும் உயர்
முதுகுன்ற டைவோமே!

—திருஞானசம்பந்தர்
(திருமுது குன்றம்)



